# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம்
நெல்வளமே நாட்டின்வளம்

சொற்குவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்
(திருவிளையாடற்புராணம்–
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 3 விளைச்சல் : 24 திருவள்ளுவர் ஆண்டு 2053 மே திங்கள்

## உள்ளே...













# பொறியியல் கலைச்சொற்கள்

| | | | |
|---|---|---|---|
| Acceleration board | முடுக்குப் பலகை | Gyroscope | சுழிப்பியக்கமானி |
| Acceleration test | முடுக்க ஆய்வு | Insulator | மின்காப்பு |
| Acceleration time | முடுக்கல் நேரம் | Main switch | முதன்மைச் சொடுக்கி |
| Anti transpirant | நீராவித் தடுப்பி | Power bank | மின்னாற்றல் தேக்கி |
| Auto start | தன் தொடக்கி | Power grid | மின் பகிர்மானம் |
| Boiler tube | கொதிகலக் குழாய் | Power house | மின்னகம் |
| Capacitor | கொள்திறக்கலம் | Power plant | மின்திறனாக்க நிலையம் |
| Circuit board | மின்சுற்றுப் பலகை | Push button starter | அழுத்துப் பொத்தான் தொடக்கி |
| Cryotron | தண்ணியன் | Restart | மீள் தொடக்கம் |
| Earth rod | தரையிணைப்புத்தண்டு | Air strip | நச்சுத் தீ வளி முடக்கி |
| Earth wire | நிலவடம் | Bimotored Treadle | இருபொறி கொண்ட மிதிபொறி |
| Electric welding | மின் பற்றிணைப்பான் | | |
| Fuse carrier | உருகித் தாங்கி | | |
| Guillotine | வல்லறுவி (தலை வெட்டி) | | |

சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.


# சொல்வயல்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு
திருவள்ளுவர் ஆண்டு 2053 (சித்திரை)
மே திங்கள் 2022

ஆசிரியர் : முனைவர் கோ.விசயராகவன்
இயக்குநர்

பொறுப்பாசிரியர் : முனைவர் வே.கார்த்திக்

இதழ்க்குழு : திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திரு. ப. தீபக்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
கட்டணமில்லா அழைபேசி : 14469
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No:75,Santhome high Road,
MRC Nagar, Chennai–28
Toll free : 14469
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.com

# குறள் கூறும் சொல்

"எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே" என்ற கருத்திற்கு ஏற்ப ஒவ்வொரு சொல்லும் ஒரு பொருளைக் குறித்தே உருவாகிறது. ஒரு மொழியில் உள்ள சொல்லுக்கு ஏற்ற கருத்தாழமும், சொற்செறிவும் மிக்க எளிமையான சொல்லைத்தான் நாம் கலைச்சொல் என்கிறோம். புதிய கண்டுபிடிப்பின் விளைவாகத்தான் இவை தோன்றுகின்றன. துறைசார்ந்த வல்லுநர்கள் தங்களிடையே அத்துறைசார் செய்திகளைச் சுருக்கமாகவும் துல்லியமாகவும் பரிமாறிக்கொள்வதற்குக் கலைச்சொற்கள் பயனுள்ளவையாக அமைகின்றன. இன்றைய பெரும்பான்மையான கலைச்சொற்களுக்கு அடிப்படையாக இருப்பவை சங்க இலக்கியச் சொற்கள் ஆகும். சங்க இலக்கியக் காலத்தைச் சார்ந்தது எனக் கருதப்பட வேண்டியது திருக்குறள் ஆகும். இன்றும் குறளில் உள்ள கலைச்சொற்கள் நடைமுறையில் உள்ளன. வள்ளுவப் பெருந்தகையால் இயற்றப்பெற்று உலகம் முழுமைக்கும் பொதுமறையாக விளங்கக்கூடிய மக்கள் இலக்கியமாகத் திருக்குறள் விளங்குகிறது. இதன் கருத்துகள் மக்கள் வாழும் திசைக்கெல்லாம் பொருந்தி நிற்கிறது. குறளில் உள்ள சொற்கள் சொல்நயமும், பொருள்நயமும், அணிநயமும் இயல்பாகவே கொண்டுவிளங்குகின்றன. தமிழுக்கும் தமிழருக்கும் மட்டுமல்லாது எல்லோருக்குமான வழிகாட்டி நூலாக, மதங்களினின்றும் அப்பாற்பட்டு விளங்கும் குறள் கூறும் கலைச்சொற்களுள் சிலவற்றை இங்கு நோக்குவோம்.

### எழிலி (Nimbostratus)

உயரங்களின் அடிப்படையில் முகிற் (மேகக்) கூட்டத்தைப் பத்து அடுக்குகளாக வகுத்துள்ளனர். அவற்றுள் தாழ்நிலையில் உள்ள முகில், எழிலி ஆகும். இச்சொல் சங்க இலக்கியப் பாக்களில் 33 இடங்களில் இடம்பெறுகிறது. புறநானூற்றில் "பொய்யா எழிலி பெய்விடம் நோக்கி" (173.5–7) எனவும்,

அகநானூற்றில் கார்ப்பருவம் என்ற பொருளில், "தளி மயங்கின்றே தண்குரல் எழிலி" (43. 1–8) எனவும்,

நற்றிணையில் 153ஆவது பாடலில் "தன்தொழில் வாய்த்த இன்குரல் எழிலி" எனவும் இச்சொல் ஆளப்பட்டுள்ளது.

"நெடுங்கடலும் தன்நீர்மை குன்றும் தடிந்தெழிலி
தான் நல்காதுஆகி விடின்" (குறள்.17)

ஒலி முழங்குகின்ற குளிர்ச்சியை உடைய கடலைக் குடித்து வலமாக எழுந்து மலைகளை இருப்பிடமாகக் கொண்டு பெய்யுங்காலத்தே உலகத்தை வளைத்தெழுந்த கடிய செலவினை உடைய மேகம் என முல்லைப்பாட்டு உரையில் நச்சினார்க்கினியர் கூறுகிறார்.

எனவே, கடல்மட்டத்தில் உருவாகக்கூடிய முகிலே எழிலி என்பதாகும். கடல் மட்டத்தில் உருவாகி மேலே செல்லும் முகிலுக்கு நிம்போசிட்ராட்டசு (Nimbostratus) என 20 ஆம் நூற்றாண்டில் தான் மேலைநாட்டு அறிஞர்கள் வகைப்படுத்திப் பெயரிட்டுள்ளனர். ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே இப்படியொரு சொல்லை உருவாக்கி வரைவிலக்கணம் செய்துள்ளார் வள்ளுவப் பெருந்தகை.

### வாரி (Source of Income)

வருவாய் தொடர்பான பல சொற்கள் குறளில் இடம்பெற்றுள்ளன. நாம் இன்று வருவாய், வருமானம், ஈட்டம் எனப் பல சொற்களை Revenue, Income, Proceeds என வரையறையின்றிப் பயன்படுத்துகிறோம். திருவள்ளுவர் வாரி (குறள் 14, 512), ஈட்டல் (குறள் 385), ஈட்டம் (குறள் 1003), ஆகாறு (குறள் 478), போகாறு (குறள் 478) ஆகிய சொற்களை வரவு, செலவு தொடர்பாகப் பயன்படுத்தியுள்ளார்.

"வாரி பெருக்கி வளம்படுத் துற்றவை
ஆராய்வான் செய்க வினை"
(குறள்.512)

வாரி என்றால் பொருள் வரும் வாயில்கள் என்கிறார் பரிமேலழகர். பொருள் வருவதற்கு இடமானவை என்கிறார் மணக்குடவர். பொருள் வருவாய் என்கிறார் பாவாணர்.

### ஈட்டம் (Fund)

ஈட்டல் – வந்தவற்றை ஒருவழித் தொகுத்தல், காத்தல் என்கிறார் பரிமேலழகர். வருவாய் வரும்வழி வந்த பொருள்களை ஓரிடத்துத் தொகுத்தல் என்கிறார் பாவாணர் அவர்கள்.

"இயற்றலும் ஈட்டலுங் காத்தலும் காத்த
வகுத்தலும் வல்ல தரசு" (குறள்.385)

"ஈட்டம் இவறி இசைவேண்டா ஆடவர்
தோற்றம் நிலக்குப் பொறை"
(குறள் 1003)

பரிமேலழகர், மணக்குடவர், தேவநேயப் பாவாணர் முதலானோர் ஈட்டம் என்பதற்குப் பொருள் ஈட்டலையே குறிக்கின்றனர். பொருளை ஈட்டாமல் எங்ஙனம் பிறர்க்கு வழங்க

இயலும். ஈட்டிய பொருளைத் தாமே குவித்து வைத்துக்கொண்டு பிறருக்கு ஈயாமல் இருப்பதைத்தான் தமிழ் நெறிகள் தவறென்கின்றன. எனவே ஈட்டுதல் என்பது திரட்டுதலே.

ஆகு ஆறு – Way of Income

போகு ஆறு – Way of Expenditure

"ஆகா றளவிட்டி தாயினுங் கேடில்லை
போகா றகலாக் கடை" (குறள் 478)

பொருள் வருகின்ற நெறியைத் தான் ஆகுஆறு என்கிறார் பரிமேலழகர். பொருள் வரும்வழி என்கிறார் மணக்குடவர்.

போகு ஆறு என்பதற்குச் செலவு செய்தல், பொருள் போகின்ற நெறிஅளவு எனக் குறிக்கப்படுகிறது.

## இலக்கம் (Target)

"இலக்கம் உடம்பிடும்பைக் கென்று
கலக்கத்தைக்
கையாறாக் கொள்ளாதாம் மேல்"
(குறள் 627)

இதில் செந்நாப்போதார் இலக்காகும் குறிப்பொருளை இலக்கம் என்கிறார். எனவே, aim என்பதற்கும் target என்பதற்கும் இலக்கு என்பதையே பயன்படுத்துவதைக்காட்டிலும் target என்பதற்கு இலக்கம் என்ற சொல்லைப் பயன்படுத்துவது சிறந்தது.

## பொருள் வைப்புழி (Treasure house)

"அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி"
(குறள்226)

இங்குப் பொருள் சேமிப்பகத்தை வள்ளுவப் பெருந்தகை பொருள் வைப்புழி என்கிறார்.

இணர் (Bouquet)

"இணர்எரி தோய்வன்ன இன்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று"
(குறள் 308)

"இணரூழ்த்தும் நாறா மலரனையர் கற்றது
உணர விரித்துரையா தார்" (குறள் 650)

இங்கு இணர் என்று கையாளப்பட்ட சொல்லே இன்று வழக்கத்தில் உள்ள பூங்கொத்து (Bouquet) ஆகும். தனித்தமிழ்க் கலைச்சொற்கள் எத்துணை அழகானவை. அவற்றையெல்லாம் விடுத்து நாம் பேசுவதும் எழுதுவதும் "கனியிருப்பக் காய்கவர்ந் தற்று" என்பதையே நினைவுகொள்ளச் செய்கிறது.

## பூ, காய், கனி கலைச்சொற்கள்

மலரானது பூ, வீ, போ, அலர் என்றும் பூங்கொத்தானது துணர், மஞ்சரி, தொத்து, இணர் என்றும், குலையானது தாறு, வல்லரி என்றும், பழமானது பலம், காய், கனி என்றும் பெயர் பெறும்.

"மணமலி பூவீ மலர்போது அலராம்
துணர் மஞ்சரி கொத்துத் தொத்தோடு
இணராம்
நலம் சேர் குலைதாறு வல்லரியாகும்
பலம் காய் கனியாகும் பழம்"
(உரிச்சொல் நிகண்டு பா.94)

இதையே வள்ளுவப் பெருந்தகையும்,

"காலை அரும்பி பகலெல்லாம் போதாகி
மாலை மலரும்இந் நோய்" (குறள்.1227)

என ஒரு குறளிலேயே அரும்பு, போது, மலர் என பூவின் வெவ்வேறு நிலைக்குரிய கலைச்சொற்களைக் குறிப்பிடுகிறார்.

## அறிவு, ஒட்பம்

அறிவு – Knowledge

ஒட்பம் – Wisdom

சிலர் Knowledge, Wisdom என இரண்டுக்கும் அறிவு என்ற ஒரு சொல்லையே பயன்படுத்துகின்றனர். நமக்குத் தெரியவில்லை என்பதால் தமிழில் சொற்கள் இல்லையென்று ஆகிவிடாது. திருக்குறளில் இரண்டுக்கும் வேறுபட்ட சொற்கள் உள்ளன. அறிவு – Knowledge என்பதை அறிவுடைமை என்ற அதிகாரத்தின் மூலம் பல்வேறு இடங்களில் கையாண்டுள்ளார். சங்க இலக்கியங்களில் அறிவு என்பது 43 இடங்களில் ஆளப்பட்டுள்ளது. ஆனால் ஒட்பம் என்பதை வள்ளுவர் மட்டுமே கையாண்டுள்ளார்.

"கல்லாதான் ஒட்பம் கழியநன்று ஆயினும்
கொள்ளார் அறிவுடை யார்" (குறள் 404)

"உலகம் தழீஇயது ஒட்பம் மலர்தலும்
கூம்பலும் இல்லது அறிவு" (குறள் 425)

இக்குறள்களில் ஒட்பம் – Wisdom என்னும் பொருளிலேயே கையாண்டுள்ளார்.

இதுபோன்ற எண்ணற்ற கலைச்சொற்கள் குறளில் பொதிந்துள்ளன.

- வாய் (மனை, இடம், வாசல்) – குறள் 1001
- பொறை (பாரம்) குறள் 1003
- தமியள் (தனியாகயிருப்பவள்) குறள் 1007
- துனி (வெறுப்பு, வறுமை) குறள் 1010
- வறம் (வற்றுகை) குறள் 1010
- திரு (அழகு) குறள் 1011
- மடி (ஆடை) குறள் 1023
- உஞற்று (முயற்சி) குறள் 1024
- தோல் (புகழ்) குறள் 1043
- நெருநல் (நேற்று) குறள் 1048
- நிரப்பு (வறுமை) குறள் 1049
- கண்பாடு (உறக்கம்) குறள் 1049
- காடி (கஞ்சி) குறள் 1050
- கரப்பு (மறைக்கை) குறள் 1051
- அஞர் (அச்சம்) குறள் 1086
- ஞாட்பு (போர்க்களம்) குறள் 1088

- அடுநறா (காய்ச்சிய சாராயம்) குறள் 1090
- யாப்பு (அன்பு) குறள் 1093
- கதுப்பு (தலைமயிர்) குறள் 1105
- தூவி (பறவையிறகு) குறள் 1120
- புணை (மரக்கலம்) குறள் 1134
- மறுகு (தெரு) குறள் 1139
- இனன் (உறவினன்) குறள் 1158
- படல் (உறக்கம்) குறள் 1175
- அஞர் (மனவருத்தம்) குறள் 1179

**நிறைவாக,** அடவு என்பது நாட்டியக் கலைச்சொல். வினைச்சொல் என்பது இலக்கணக் கலைச்சொல். Wisdom என்பதற்குப் பேரறிவு என்ற சொல்லைப் பயன்படுத்துகிறோம் என்பது ஒட்பம் என்னும் கலைச்சொல்லை நாம் அறியாமையைத்தான் காட்டுகிறது. எப்பொழுதுமே நாமாக ஒரு புதுச்சொல்லை உருவாக்கும் முன் அதற்குச் சரியான பழஞ்சொல் இருக்கிறதா என அறிந்து அச்சொல்லைப் பயன்படுத்தினால் தனித்தமிழ்ச் சொற்கள் மீண்டும் புழக்கத்திற்கு வந்துவிடும். அத்துணை ஆண்டுகளுக்கு முன்னே இத்தகைய சொல்லாடல்களுக்குத் தனிச்சொற்களைத் தமிழர்கள் பயன்படுத்தியுள்ளனர் என்பதையும் உலகறியும். திருக்குறள் ஒரு சொற்களஞ்சியம். நறுக்குத் தெறித்தாற்போல் இரண்டு மூன்று எழுத்துகளில்கூட அரிய பொருள் தரக்கூடிய சொற்கள் குறளில் உள்ளன. ஒன்றே முக்கால் அடியில் கூற வந்த கருத்து அறுபடாமல் இருக்க முத்துகள் கோத்தாற்போன்ற சொல்லாக்கத்தை ஐயனின் பொதுமறையில் காணமுடிகிறது.

அகரமுதலி இயக்ககம் 2016ஆம் ஆண்டிலிருந்து தமிழ்க்கலைச்சொல்லாக்கப் பணிகளை மேற்கொண்டுவருகிறது. இப்பணிக்குத் துணைநிற்கும் அகராதியியலாளர்கள், சொல்லாக்க வல்லுநர்கள், மொழியியலாளர்கள், தமிழறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், மாணவர்கள் உள்ளிட்ட அனைவருக்கும் இவ்வியக்ககத்தின் சார்பில் நன்றி நவில்கிறேன்.

ஞாலமறிந்த அகராதியியல் அறிஞர் முனைவர் ச.சச்சிதானந்தம் அவர்களின், "தமிழ்மொழியும் ஐரோப்பிய முதன் மொழிகளும் " என்னும் பொருண்மையிலான கட்டுரையும், மலேயாவாழ் தமிழறிஞர் திரு. இரா. திருமாவளவன் அவர்களின் "மலேசியாவின் தோட்டப்புறத் தமிழர்கள் பயன்படுத்திய அருந்தமிழ்ச் சொற்கள்" என்னும் கட்டுரையும், திரு.செல்லதுரை குணசிங்கம் அவர்களின், 'TAMIL EPIGRAPHICAL STUDIES IN SRI LANKA' எனும் பொருண்மையிலான ஆங்கிலக் கட்டுரையும், திருப்பத்தூர் தூயநெஞ்சக் கல்லூரித் தமிழ்த்துறைத் (சுயநிதிப்பிரிவு) தலைவர் முனைவர் பி. பாலசுப்பிரமணியன் அவர்களின், "சங்க இலக்கியத்தில் அகவுநர்" என்னும் பொருண்மையிலான கட்டுரையும் இம்மாதச் "சொல்வயல்" மின்னிதழுக்கு அணிசேர்க்கின்றன. அப்பெருந்தகைகளுக்கு மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

இவ்வியக்ககம் நெறிப்படுத்தும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்குகளில் பங்கேற்றுத் தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றிய பலதுறை சார்ந்த அனைத்துத் தமிழுள்ளங்களுக்கும், பயிலரங்கங்களுக்கான தொழில்நுட்ப ஒருங்கிணைப்பைச் செய்துவரும் சென்னை வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர் இரா. பன்னிருகைவடிவேலன் அவர்களுக்கும் அகம்நிறை அன்பு நன்றியை உரித்தாக்குகிறேன்.

தமிழ் என்னும் ஒற்றைப்புள்ளியில் ஒருங்கிணைந்த உள்ளத்தினராய் என்றென்றும் ஒருங்கிணைந்து செயலாற்றுவோம்...

செயலால் பேசுவோம்...

# தமிழ்மொழியும் ஐரோப்பிய முதன்மொழிகளும்

அகராதியியலாளர், முனைவர் ச.சச்சிதானந்தம்.
இயக்குநர் : பன்னாட்டு உயர்கல்வி
தமிழாய்வு நிறுவனம். பாரிசு



**"மக்களுக்கு அவர்தம் உலகைப் பற்றிய கோட்பாடுகள் அவரவர் பேசுகின்ற மொழியால் கட்டுண்டு இருக்கின்றன"**

**–மொழியியல் சார்பியற்கொள்கை**

மொழி ஒரு கருவி. மனிதன் மொழி கொண்டுதான் வாழ்கிறான். மனித சமுதாயம் மொழியால் கருத்துப் பரிமாற்றம் செய்கிறது. இக்கருவி இல்லாமல், செய்தித் தொடர்பையும் பண்பாட்டு வெளிப்பாட்டையும் நினைத்துப் பார்க்க முடியுமா!

உலகில் கிட்டத்தட்ட 6000–க்கும் மேற்பட்ட மொழிகள் இருப்பதாக ஆய்வு நிலை மொழிநூல்கள் கூறுகின்றன. ஒவ்வொரு மொழியும் அந்தந்த இனத்தின் தேவைகளுக்குத் தக்கவாறு அமைந்துள்ளன. இதனால், மொழிகளிடையே உயர்வு – தாழ்வு பார்ப்பது பொருத்தம் அற்றது. இவ்வாறே அழகு – அழகின்மை காண்பதும் பொருள் அற்றது.

தமிழ் திராவிடமொழிக் குடும்பத்துக்கு உரியது. பழைமைக்குப் பழைமையாய்ப் புதுமைக்குப் புதுமையாய் விளங்கும் சில பழைய மொழிகளில் தமிழ் மொழியும் ஒன்று. உலகத்தில் தோன்றிய பல மொழிகள் இறந்துவிட்டன, சில வழக்கிழந்துபோய்விட்டன. ஆங்கிலம் பிறப்பதற்கு முன்னே, பிரெஞ்சு தோன்றுவதற்கு முன்னே தோன்றி, வளரும், வாழும் மொழிகளில் கிரேக்கம், ஹீப்ரூ, சீனம், அரபு, பேர்சியம் முதலானவை உள்ளன. சுமேரியம், எகிப்தியம், ஹிற்றித் போன்றவை இறந்துபோன மொழிகள். இலத்தீன், ரோமன் கத்தோலிக்கத்திலும், சமஸ்கிருதம் வேதத்திலும் பயன்படுத்தப்பட்டாலும் வழக்கிழந்த மொழிகளாகக் கருதப்படுகின்றன. இருபத்திமூன்று திராவிட மொழிகளில் தமிழ், மலையாளம், தெலுங்கு, கன்னடம் ஆகிய நான்கும் முதன்மையானவை. இவற்றில் தமிழே உலகில் அதிகம் அறியப்பட்ட மொழியாகத் திகழ்கிறது.

திராவிட மொழிக் குடும்பம்
(திருந்திய மொழிகள்)

தமிழ் | மலையாளம் | தெலுங்கு | கன்னடம் | துளு

உலகின் எல்லாப் பாகங்களிலும் இந்தோ – ஐரோப்பிய மொழிகள் பரவி உள்ளன. ஐரோப்பாக் கண்டத்தில் ஏறத்தாழ அறுபது மொழிகள் வழங்கப்படுகின்றன. இவற்றில் முப்பது மொழிகள் மட்டுமே உத்தியோகபூர்வ / தேசிய மொழிகளாக அங்கீகாரம் பெற்றவை. அல்பேனியம், ஆர்மீனியம், ஆங்கிலம், இத்தாலியம், ஸ்பானியம், கிரேக்கம், டச்சு, பிரெஞ்சு, போர்த்துக்கேயம், ஜெர்மன், சிலாவியம் முதலான மொழிகளுடன் ரஷ்ய மொழியும் முக்கியமான ஐரோப்பிய மொழிகளாக உள்ளன. ஆயினும் இம்மொழிகளுள் ஆங்கிலம், பிரெஞ்சு, ஜெர்மன் ஆகிய மூன்றுமே ஐரோப்பாவில் முதன்மொழிகள் எனும் மேனிலை கொண்டு விளங்குகின்றன.

**இந்தோ – ஐரோப்பிய மொழிக் குடும்பம்**

அல்பேனிய இந்திய செலதிய ஈரானிய இலத்தீனிய கிரேக்க ஜெர்மனிய பால்திக்

இம்மூன்று மொழிகளும் இந்தோ – ஐரோப்பிய மொழிக் குடும்பத்தைச் சேர்ந்தவை. மொழிக் குடும்பங்களில் இந்தோ – ஐரோப்பிய மொழிக் குடும்பமே பெரியது. இவற்றில் பிரெஞ்சு இலத்தீனிய (ரோமானிய) இன மொழிப் பிரிவைச் சேர்ந்தது. மற்றைய இரு மொழிகளும் ஜெர்மானிய இன மொழிப் பிரிவில் அடங்கும்.

## தமிழ்மொழியும் ஐரோப்பிய முதன்மொழிகளும்

**இலத்தீனியம்**

பிரெஞ்சு ஸ்பானியம் போர்த்துக்கேயம் இத்தாலியம் ருமேனியம் புரொவென்ஸால்

**ஜெர்மனியம்**

சுவீடியம் டேனிஷ் நோர்வேஜியன் ஐஸ்லான்டிக் ஜெர்மன் டச்சு ஆங்கிலம்

மேற்கூறப்பட்ட நான்கு திராவிட மொழிகளும் ஒரே இனமொழிகள். இவை திராவிடம் எனும் தொல்மொழியிலிருந்து பிறந்தவை. இவ்வாறே பிரெஞ்சு, இத்தாலியம், ஸ்பானியம், போர்த்துக்கேயம், புரொவென்ஸால் ஆகியன இலத்தீன் எனும் தொல்மொழியிலிருந்து வந்தவை.

ஒரு மொழியின் முதன்மையும் பரம்பலும் அம்மொழி பேசும் மக்களின் வளர்ச்சியிலும் முன்னேற்றத்திலும் தங்கி உள்ளன என்பதே வரலாறு காட்டும் உண்மை. இந்தியா, இலங்கை, சிங்கப்பூர், மலேசியா, இந்தோனேசியா, தென்னாபிரிக்கா, வியட்நாம், சுரிநாம், குவாதலுப், மார்த்தினிக், மடகஸ்கார், மெரிசியஸ், றியூனியன், தான்சானியா, பிஜித்தீவு, பர்மா, ரிறினிடாட், மாலைத்தீவு முதலான 18 நாடுகளில் தமிழ் பயன்படுத்தப்படுகிறது. தமிழரின் மொழி சுமார் 60 மில்லியன் பேரால் கருத்துப் பரிமாற்றத்தில் கையாளப்படுகிறது.

ஸ்பானிய மொழி 20 நாடுகளில் பேசப்பட்டு வந்தாலும் ஐரோப்பிய முதன்மொழி அந்தஸ்தைப் பெறவில்லை. போர்த்துக்கேய மொழியும் ஐரோப்பா, அமெரிக்கா, ஆபிரிக்கா, ஆசியக் கண்டங்களில் 7 நாடுகளுக்குரிய மொழியாக இருக்கிறது. ஆங்கிலம் 47 நாடுகளில் வழங்கப்பட்டுச் சர்வதேச மொழியாக மேன்மை பெற்று இலங்குகிறது. பிரெஞ்சு 30 நாடுகளின் மொழியாக உள்ளதால், உலகின் இரண்டாவது மொழியாகச் சிறப்புறுகிறது. இரண்டு உலகப் போர்களிலும் ஜெர்மனி முக்கிய கர்த்தாவாக இருந்ததினால் அந்நாட்டு மொழி உலகில் ஒரு நல்லபெயரைப் பெறமுடியாது போய்விட்டது. ஆனால் ஜெர்மனியின் இன்றைய வளமும் பலமும் ஐரோப்பிய ஒன்றிய உருவாக்கத்திற்கு அதன் பங்களிப்பும் ஜெர்மனிக்கு ஐரோப்பாவில் ஒரு பெரும் இடத்தை அளிக்கக் காரணம் ஆகின்றன.

எஸ்பெறன்ரோ எனப்படும் செயற்கை மொழி ஐரோப்பிய ஆங்கில மொழியாக சர்வதேச

மொழியாக உருவாக்கப்பட்டிருந்தது. நாடுகளுக்கிடையே புரிந்துணர்வையும் நல்லுறவையும் ஏற்படுத்த முடியும் என்பதை நம்பி அகிலம் பூராவும் ஒரே மொழி வழங்கப்படுவதை மக்கள் விரும்பினார்கள். ஒரு மொழி வேண்டும் என்ற இடத்துப் பல செய்கை மொழிகள் இயற்றப்பட்டன. அவற்றில் வொலாபுய்க், எஸ்பெறன்ரோ, இன்னராலிங்குவா என்பன முதன்மையானவை. இம்மூன்றினுள்ளும் இரண்டாவது மொழி ஏற்றுக்கொள்ளப்பட்டது. எஸ்பெறன்ரோ மொழியை 1887 இல் Ludwing Lazarus Zamenhof என்ற போலந்துக்காரர் படைத்தார். இன்று இம்மொழிதான் செய்கை மொழியில் முதலிடம் வகிக்கிறது. ஆனால் இது சில மொழியியல் அரசியல் காரணங்களுக்காக முதன் மொழியாகச் செல்வாக்குப் பெறமுடியாத நிலைக்குத் தள்ளப்பட்டுவிட்டது.

| Englishs | Français | Deutsch | Esperanto | தமிழ் |
|---|---|---|---|---|
| Coffee | Le cafe | der Kaffee | kafo | காப்பி |
| problem | Le probleme | das Problem | problemo | பிரச்சினை |
| Minute | Le minute | die minute | minuto | நிமிடம் |
| Lamp | Le lampe | die Lampe | ampo | விளக்கு |
| Modern | Moderne | Modern | Moderna | நவீன |

ஆங்கிலம் ஐரோப்பாவில் ஐக்கிய இராச்சியத்தில் வழங்கப்படுகிறது. பிரான்சு, அந்தோரா, மொனோக்கோ, பெல்ஜியம், லக்சம்பேர்க், சுவிற்சலாந்து ஆகிய நாடுகளிலும் ஜெர்மன், ஜேர்மனி, ஆஸ்திரியா, சுவிற்சலாந்து, லக்சம்பேர்க், லிஸ்ரென்ஸ்ரெயின் ஆகிய 5 நாடுகளிலும் பேசப்படுகிறது. ஆங்கிலம் உலகில் 600 மில்லியன் மக்களாலும், பிரெஞ்சு 130 மில்லியன் மக்களாலும், ஜெர்மன் 100 மில்லியன் மக்களாலும் பேசப்படுகின்றன.

ஆங்கிலம், ஆங்கில்(Angel) இனத்தவரின் மொழியாதலால் ஆங்கிலம் எனப் பெயர் கொண்டது. இம்மொழி கடல் கடந்து வந்த ஜெர்மனிய இனத்தவரான ஆங்கில எனும் வந்தேறுகுடியினரால் ஐந்தாம் நூற்றாண்டின் நடுப்பகுதி ஆரம்பத்தில் பிரித்தானியத் தீவுக்குக் கொண்டுவரப்பட்டது. ரோமானிய மொழியாகவும் இருக்கிறது. மிகச்சிறிய நாடொன்றின் மொழியாக இருந்த காலனித்துவ முறையினாலும் குடியேற்றப் பரம்பலினாலும் பிரித்தானியத் தீவுகள் தொட்டு வடஅமெரிக்கா, ஆஸ்திரேலியா, தென்னாபிரிக்கா முதலான நாடுகள் வரை ஆங்கிலம் பரவியது. இவ்வாறு பரவிய ஆங்கிலம் எல்லை விஞ்சிய ஆங்கிலம் New Englishes என அழைக்கப்படுகிறது. பிரித்தானியாவின் ஆட்சிக்கு உட்பட்டிருந்து விடுபட்ட நாடுகளான இந்தியா, இலங்கை, சிங்கப்பூர், மலேசியா, ஆபிரிக்கா, கரீபியன்தீவு முதலான நாடுகள் வரை வழங்கப்படும் ஆங்கிலம் புதிய ஆங்கிலங்கள் (New English) என்றழைக்கப்படுகின்றன.

பிரெஞ்சு இலத்தீன் மொழியிலிருந்து பிறந்ததாகக் கொள்ளப்பட்டாலும் வரலாற்று ரீதியாக ஆராயும்போது அது ஒரு தனிமொழியிலிருந்து வளர்ந்தது அல்ல என்பது தெரியவரும். இலத்தீனுடன் கொலுவா, வ்றாங்க் மொழிகளும் கலந்து உருவானதே இம்மொழி. 5–12 நூற்றாண்டுக் காலப்பகுதியில் பிரான்சின் வடபகுதியில் லாங் தோய்ல், தென்பகுதியில் லாங்த்ஒக் எனும் பிராந்திய மொழிகள் இருந்தன. இவ்விரு பிராந்திய மொழிகளில் பல கிளைமொழிகள் பேசப்பட்டன. பாரிசிலும் அதன் சுற்றுப் பகுதிகளிலும் le francien கிளை மொழி வழங்கப்பட்டது. இது மன்னர்களின் மொழியாகி le français என ஆனது. பின்னர் le français ஆகப் பெயர்மாறி மற்றைய கிளை மொழிகளை மேவி, ஆட்சிமொழியாகிப் பிரான்சின் மொழியாக உயர்ந்தது. உலகில் கற்றவர்கள் அறிந்த நாகரிக மொழியாகப் பெருமை கொள்கிறது பிரெஞ்சு மொழி.

ஜெர்மன் மொழியும் பிறப்பியல் வழியில் ஜெர்மனிய மொழியாகவும், எழுத்தியல் வழியில் ரோமானிய மொழியாகவும் (1941) உலவுகிறது. முந்திய காலத் தொடக்கப் பகுதியில் தாழ் ஜெர்மனியம், உயர் ஜெர்மனியம் என இருவகையான பிரதேச மொழிகள் இருந்தன. தற்பொழுது உயர் ஜெர்மனியமே ஆளுமையான மொழியாக ஆகியுள்ளது. வைதீக கிறிஸ்தவத்துக்கு எதிராகப் புரட்சி செய்த மார்டின் லூதர் உயர் ஜெர்மனிலேயே தமது கருத்துகளை வெளியிட்டதால், இவ்வகை, ஜெர்மனே உத்தியோக, தேசிய ஜேர்மனாக உயர்ந்துள்ளது.

இலக்கணம் அடிப்படையில் மொழிக் குடும்பக் கொள்கை (Family Tree theory), August Schlegal (1967–1845) எனும் ஜெர்மனிய மொழியாய்வாளரால் அறிமுகப்படுத்தப்பட்டது. பொதுவில் அனைத்து ஐரோப்பிய மொழிகளும் இலத்தீனில் இருந்தே எழுத்து வரி வடிவங்களை எடுத்தன. ஜெர்மன் ஆனாஆவன்னாவில் கோதிக், இலத்தீன் என இருவகை எழுத்து வடிவங்கள் உண்டு. இம்மொழி 1941 இலிருந்து இலத்தீன் எழுத்துகளை இரவல் பெற்றது. இலத்தீன் கிரேக்கத்தில் இருந்தும் கிரேக்கம் போனிசிய நெடுங்கணக்கில் இருந்தும் இரவல் பெற்றது.

| தமிழ் | ஆங்கிலம் | பிரெஞ்சு | ஜேர்மன் |
|---|---|---|---|
| மாதா | Mother | Mere | Mutter |
| பிதா | Father | Pere | Vater |
| நாமம் | Name | Nom | Name |
| திரி | Three | Trois | Drei |

| தமிழ் | நான் தமிழ் பேசுகிறேன் | எழுவாய் + செயப்படுபொருள் + பயனிலை |
|---|---|---|
| ஆங்கிலம் | I speak English | எழுவாய் + பயனிலை +செயப்படுபொருள் |
| பிரெஞ்சு | Je parle Français | எழுவாய் + பயனிலை +செயப்படுபொருள் |
| ஜேர்மன் | Ich spreche Deutsch | எழுவாய் + பயனிலை +செயப்படுபொருள் |
| எஸ்பெறன்ரோ | Mi parolas esperanto | எழுவாய் + பயனிலை +செயப்படுபொருள் |

**வாக்கிய ஒழுங்கு – தொடரமைப்பு**

ஐரோப்பாவில் கிரேக்க அறிஞர்களான பிளேட்டோ (Plato கி.மு. 429–347), அரிஸ்டாட்டில் (Aritsotle கி.மு. 384 – 322) போன்றோர் கிரேக்க இலக்கணத்தைச் செய்திருந்தாலும், Dionysius (கி.பி. 2ஆம் நூற்றாண்டு செய்த இலக்கணமே மேற்கு நாடுகளில் முறையான இலக்கணமாக ஏற்றுக்கொள்ளப்பட்டது. இலத்தீனில் Donatus (கி. பி. 400), Priscian கி.பி. 500) ஆகிய அறிஞர்கள் இலக்கஞ் செய்தனர். பிரெஞ்சு இலக்கணத்தை 1553 இல் Palsgrave John எனும் ஆங்கிலேயர் இங்கிலாந்தில் எழுதினார். (இக்கட்டுரையாளர் 1985 இல் பிரெஞ்சு இலக்கணத்தைப் பற்றி தமிழில் முதல் நூலினை எழுதியுள்ளார்)

**ஒற்றுமைக் கூறுகள்:**

இருவகை மொழிகளிலும் அண்மைச் சுட்டுகள் இகரமாகவும் சேய்மைச் சுட்டுகள் அகரமாகவும் உள்ளன.

| | தமிழ் | ஆங்கிலம் | பிரெஞ்சு | ஜேர்மன் |
|---|---|---|---|---|
| சேய்மைச் சுட்டு | அது | That | Cela(la) | Das |
| அண்மைச் சுட்டு | இது | This | Ceci(ici) | Dies(e) |

**வேற்றுமைக் கூறுகள்:**

தமிழ் மொழியில் பொருள்களின் இயற்கையான தன்மை கண்டே பால் பகுக்கப்படுகிறது. ஐரோப்பிய மொழிகளின் பாகுபாடு செயற்கை ஆனது. இம்மொழிகளில் – குறிப்பாக டொஜ்ஜிலும், பிரான்சேயிலும் பொருள்களின் தன்மைக்கும் அவற்றினை உணர்த்தும் சொற்களின் பாலுக்கும் தொடர்பு இல்லை.

தமிழறிஞர்கள் மட்டுமல்லாமல் வெளிநாட்டவர்கள், குறிப்பாக ஐரோப்பிய அறிஞர்கள் பலரும் தமிழ் இலக்கணம் எழுதியுள்ளனர். Baldeeus என்ற டச்சுக்காரர் கி.பி. 1672இல் இந்தியா பற்றிய நூலினைத் தமிழின் உச்சரிப்புகள், வேற்றுமைப் பாகுபாடுகள், வினைச்சொல் திரிபு வாய்ப்பாடு முதலியவற்றைக் குறிப்பிட்டுச் சென்றிருக்கிறார். கி.பி.1680 இல் Costo Blathsata என்பவர் தமிழ் இலக்கணத்தை இலத்தீனில் எழுதினர். Grammatica Damulica நூலை ஜெர்மன் அறிஞரான Zieganbalg 1786 இல் ஆக்கினார். வீரமாமுனிவர் எனத் தமிழர்களால் தமிழ்ப்பெயர் சூட்டப்பட்ட, தைரியநாதர் எனத் தன் பெயரைத் தமிழ்ப்பெயராக்கிய இத்தாலியப் பாதிரியாரான Constantius Joseph Beschi பல அகராதிகளையும், இலக்கண நூலையும் வெளியிட்டார். இதுபோல் ஆங்கிலேயர்களான G.U.Pope, Caldwell போன்றோர் எழுதிய இலக்கணங்கள் தமிழ்மொழி வரலாற்றில் குறிப்பிடப்படவேண்டியவை. தேமதுர தமிழோசை உலகமெலாம் பரவும் வகை செய்தல் வேண்டும் எனப் பாரதியார் (1889–1921) கவிதை புனையுமுன்பே ஐரோப்பியர்கள் தமிழின் புகழை நன்கு பரப்பியுள்ளனர். இவர்கள் அனைவருக்கும் தமிழர்கள் நன்றிக்கடன் பட்டவர்கள்.

தமிழ்மொழி நீண்ட ஒரு வரலாற்றினையும் நெடிய ஓர் இலக்கண இலக்கியப் பாரம்பரியத்தையும் கொண்டது. தமிழ் படிக்கவேண்டும் என்று சொன்ன உடனேயே, "தமிழா? அதில் என்ன படிக்க இருக்கிறது! நாம் அனைவரும் கரைகண்டுவிட்டுத்தானே இருக்கிறோம்." என நினைக்கிற பழக்கம் ஒன்று நமக்கு இருக்கிறது. தமிழ் படித்தல் அல்லது மரபு பற்றிய இலக்கணங்களைப் பற்றி அறிதல்தான் தமிழ் என நாம் கிணற்றுத்தவளை நினைப்பு நினைத்து தமிழுக்கு வரம்பு, வரையறை எல்லாம் போட்டுவிடுகிறோம். ஆனால் உண்மையில் தமிழில் நல்ல தேர்ச்சிபெற்றவர்கள் கூட அறிவதற்குத் தமிழில் கடலளவு உண்டு என்பதை நாம் நன்கு அறிதல் வேண்டும்.

நமது தலைமுறைகளுக்குத் தமிழ் கற்பிக்கிறோம் என்று பறையடித்து ஈழத்து, இந்தியச் சிறுவர் நூல்களைப் பயன்படுத்துகிறோம். இது நடைமுறையில் எவ்வளவு தூரம் பலன் அளிக்கிறது! பிள்ளைகளைப் பெறும் கல்வி முறைக்கு ஒத்த ஒரு முறையில் போதித்தால் அவர்களைத் தமிழிலும் முதன்மைபெறச் செய்யமுடியும். தெரிந்ததைக் கொண்டு தெரியாததைத் தெரியச்செய்வது கூடிய விளக்கத்தைத் தரும். புலம்பெயர் நாட்டில், ஊனாவுக்கு உரிய சொல்லுக்கு உரல் உதாரணம் கூறுவது பாலைவனத்தில் தென்றலை எதிர்பார்ப்பதைப் போன்றது. வேண்டுமாயின், கீனாவுக்கு கீரையைக் காட்டலாம்; கிணற்றைக் காட்டலாமா? அந்தந்த நாட்டுக் கல்விமுறைக்குப் பழக்கப்பட்ட பிள்ளையை ஆசிரியர் தாய்நாட்டுக் கல்விமுறைக்கு மாற்றுவது எதிர்பார்த்த பலனைத் தராமல் விடுவது ஏதுவாகும்.

உலகத்தின் முன்னிலையில் உள்ள இருபது மொழிகளில் தமிழும் ஒன்று. மொழிகளில் ஐரோப்பிய மொழிகளே உலகில் அரைவாசிப்பகுதியினரால் பேசப்படுகின்றன. ஐரோப்பிய முதன் மொழிகளான ஆங்கிலம், பிரெஞ்சு, ஜெர்மன் ஆகிய மூன்றும் உலக மேலாதிக்க மொழிகளாகக் கொள்ளப்படுகின்றன. மக்களால் உண்டாக்கப்பட்டதும் மக்களால் வளர்க்கப்படுவதும் மொழி! இதற்கு நன்றி சொல்லும் விதத்தில்தானோ என்னவோ இந்த மொழி! மக்கள் வாழ்வை வளப்படுத்துகிறது. தலைமுறை தலைமுறையாக மனித சமுதாயம் சம்பாதித்த அறிவெல்லாம் இந்த மொழியில்தானே இருக்கிறது. மொழி அறிவு ஒரு மனிதன் தன்னைத் தானே உணரத் துணைசெய்கிறது. உலகத்தைப் புரிந்துகொள்ள வழிசெய்கிறது. மொத்தத்தில் அறியாமையை அகலச் செய்து அறிவின் அளவை அகலச் செய்கிறது மொழி!

நன்றி; தெரியத் தெரியத் தெரியாமை தெரியும்..

---



# மலேசியாவின் தோட்டப்புறத் தமிழர் பயன்படுத்திய அருந்தமிழ்ச் சொற்கள்




**இரா. திருமாவளவன்**
துணைத்தலைவர்,
கலைச்சொல்லாக்கக் குழு,
மலேசியத் தமிழ்மொழிக் காப்பகம்,
மலேசியா


## 1.0 முன்னுரை

பிற்கால மலேசியத் தமிழர்கள் இந்நாட்டிற்கு இரண்டு நூற்றாண்டுகளுக்கு முன்னர் ஆங்கிலேயரால் கொண்டுவரப்பட்டனர். எனினும் தமிழரின் உலகப்பரவலை ஆய்வு செய்தால் கிறித்துவத்திற்கு முந்தியும் கிறித்துவத்திற்குப் பிந்தியும் தமிழரின் பரவல் சான்றுபட நிறுவப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

1. கண்டறியும் நோக்கில் புதிய இடத்தில் பரவல்,
2. கடற்கோளின் கொடுமையால் புதிய இடங்களைநோக்கிப் பரவல்,
3. வணிக நிமித்தமாகச் சென்று பரவல்,
4. ஆட்சி அதிகாரங்கள் நிமித்தமாகப் பரவல்,
5. பிழைப்பு நிமித்தமாகப் பரவல்,
6. போர் நிமித்தமாகப் பரவல்,

என்று பலவகையாக அவர்களின் பரவலைப் பிரிக்கலாம்..

சில வரலாற்றுக் குறிப்புகளின்படி பிற்காலத்தமிழரின் வருகை கி.பி18 ஆம் நூற்றாண்டிலேயே நிகழ்ந்துள்ளது தெரியவருகின்றது. பினாங்குத்தீவில்1786 ஆம் ஆண்டு ஆங்கிலேய ஆளுமையாளர்கள் தங்கள் அலுவலகங்களைத் திறந்த வேளையில் வீட்டுப்பணிக்காகவும் தோட்டப் பணிக்காகவும் தமிழர் கொண்டுவரப்பட்டதாக அக்குறிப்புகள் தெளிவிக்கின்றன. 19 ஆம் நூற்றாண்டின் இறுதிக் காலப்பகுதியில் பல்லாயிரவர் பினாங்கில் குடியேற்றப்பட்டனர். 1819 ஆம் ஆண்டு சிங்கப்பூரின் உருவாக்கத்திற்குப் பின்பு இவ்வெண்ணிக்கை மேலும் அதிகரித்தது எனலாம்.

19 ஆம் நூற்றாண்டின் தொடக்கப் பகுதியிலிருந்து தமிழரின் வருகை இலக்கக்கணக்காகப் பெருகியது. வெள்ளையர் கங்காணி முறைத்திட்டத்தின் கீழ் யானையை யானை கவர்ந்திழுப்பது போல் தமிழ் நாட்டில் பசிப்பிணி பஞ்சத்தால் அல்லலுற்ற தமிழர் பல்லாயிர வரைமலையக நாட்டுக்குக் கூலித்தொழிலாளிகளாகக் கவர்ந்திழுத்தனர். அப்படி வந்த தமிழர் இம்மலையகத் திருநாட்டின் வளப்பத்திற்காக தம்மைத்தாமே ஈகம்செய்த வரலாற்றை விரிவாகவே விளக்க முடியும்.

இவ்வாறு கொண்டு வரப்பட்டவர்கள் முன்பின் அறியாத இடங்களில் முன்பின் அறியாத தொழிலுக்காகக் கூட்டம் கூட்டமாகக் குடியமர்த்தப் பெற்றனர். அன்றைய வெள்ளையர்களுக்கு இவர்களைப் பிரித்தாளும் சூழ்ச்சி இருந்ததே ஒழிய இவர்களின் குமுகாய அமைப்பு முறையைச் சிதறடித்துவிட வேண்டும் என்ற எண்ணம் இருந்ததில்லை. தமது வணிக நோக்கிற்காக மட்டுமே இவர்கள் மீது அவர்கள் ஆதிக்கம் செலுத்தினர் எனலாம். அந்த வணிகச் சிந்தனைக்கு முரணான ஓர் இனத்தின் அடிப்படைக்கூறுகளை அவர்கள் எதிர்த்தனர். ஆனால், இன அழிப்பு நோக்கம் அவர்களுக்கிருக்கவில்லை. எனவேதான் முதலாளிய மேலாண்மை இருந்த சூழலிலும் தமிழ்க்கல்வி, தமிழ்ப்பண்பாடு தமிழ்மக்களால் தடையின்றிப் பேணப்பட்டன எனலாம். இத்தகு நிலையில்தான் முதலாளிய வெள்ளையருக்கு உழைத்த தமிழ் மக்கள் குமுகாய கட்டமைப்பு சிதறாமல் தோட்டப்புறங்களில் வாழ்ந்தனர்.

ஒரே மொழி, ஒரே பண்பாடு என்ற வகையில் ஒன்றுபட்ட தமிழ்மக்கள் ஒரே இடத்தில் வாழுகின்ற பொழுது தாங்கள் பேணி வந்த பழக்கவழக்கங்களையும், மொழி வழக்கங்களையும் மறவாமல் பேணிக் காக்கலாயினர். அனைத்து வகையான விழா நிகழ்வுகளிலும் அவர்களின் அடிப்படையான மரபுகள் பேணப்பட்டன.

இவற்றுள் மொழிப்பேணலை முகாமையான ஒன்றாகச் சொல்லலாம். கற்றவரை விட கல்லாதவராய் மரபுவழி வாழ்ந்த தோட்டப்புற மக்கள் தமிழின் நிலைப்பாட்டுக்கு ஆற்றிய இயல்பான பங்களிப்புகள் இன்றைய சூழலோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது வியக்கத்தக்கவனாக உள்ளன. இத்தோட்டப்புற மக்கள் புதிய சூழலில் தாங்கள் முன்பின் அறியாத ஒரு தொழிலை மேற்கொண்ட பொழுது, அத்தொழிலை ஒட்டிய பல்வேறு பொருள்களுக்குப் பெயர் வைக்க சொல்லைத் தேடி அலையவில்லை. இவர்கள் உருவாக்கிக் கொடுத்த பன்னூற்றுக்கணக்கான சொற்களுக்கு வேர்மூலம் தமிழ் மண்ணில் தோன்றியதாக இருக்கலாம். ஆனால், அவ்வேர்ச்சொற்களையும், மூலச்சொற்களையும் அடிப்படையாகக் கொண்டு புதிய பொருளுக்குப் பொருந்தப் பொருளுரைத்ததும் சொல்லமைத்ததும் எண்ணிப் போற்றத்தக்கதாகும். அவற்றுள் சிலவற்றை இங்குக் காண்போம்.

## 2.0 தோட்டத் தமிழரின் சொல்லாக்கங்கள்

2.1 ஒட்டுப் பால் அல்லது கோட்டுப் பால்கட்டிப்பால்

இரண்டாம் உலகப்போரின் வேளை பல்வேறு வகையான கண்டுபிடிப்புகளுக்கு நொய்வப்பால் இன்றியமையா மூலப்பொருளாய் இருந்தது குறிப்பிடத்தக்கது. இப்பால்மரத்தைச் சீவினால் நொய்வப்பால் வடியும். மரத்தின் சுற்று வட்டமாகக் கீழ் நோக்கி உளி கொண்டு சீவி பாலினை வடியச்செய்வர்.

கோட்டில் வழிந்தோடும் பால் கீழிறங்கி வடிகுழாயின் வாயிலாப் பால் குவளையில் அல்லது பால் மங்கில் வந்து நிறையும்; இவ்வாறு நிறைந்த பாலை எடுத்த பின் மீண்டும் வைக்கப்படும் குவளையில் வடிந்து காய்ந்து போகும் பாலையே கட்டிப்பால் என்றனர். பால் எடுத்த பின்பு வடிகின்ற பால் வடிபால் என்றும் அவ்வடிபால் காய்ந்து போனால் கட்டிப்பால் என்றும் அழைக்கப் பெற்றது. கட்டிப்பாலை எடுப்பதற்கு மங்கு துடைப்பார்கள்.




கட்டிப்பாலை எடுக்கும் வேளையில் கோட்டுப்பாலையும் உருவி, கீழே கிடக்கும் குச்சியை எடுத்துக் கட்டி சிறுவர் தூண்டில் போடுவார்கள். மரம் சீவிய பின் வளைவுக்கோட்டில் வளைந்தோடி மங்கில் கொட்டிய பால் நின்ற பின்னர் சீவப்பட்டகோட்டில் காய்ந்து ஒட்டிக் கொள்ளும். இதற்குத் தமிழ் மக்கள் இட்டபெயரே ஒட்டுப் பால் அல்லது கோட்டுப்பாலாகும்.

## 2.2 மங்கு

பால்மங்கு எனச் சொல்லப்படும் சொல்லில் இணைந்துள்ள மங்கு என்பது mangkuk எனும் மலாய்ச்சொல்லாகக் கருதப்பட்டது. ஆனால் வங்கு எனும் வளைவுப்பொருளில் அமைந்த சொல்லாகவே இச்சொல் காணப்படுகின்றது. தமிழ்நாட்டிலும் இச்சொல் சில ஊர்ப் பகுதிகளில் காணப்படுவதாக தென்மொழி இதழில் வெளியிடப்பெற்ற மறைந்து வரும் தமிழ்ச்சொற்கள் எனும் தொடரில் குறிப்பிடப்பட்டிருந்தது நோக்கத்தக்கது. பால்மங்கைத் தவிர்த்து இச்சொல் வீடுகளிலும் சோற்று மங்கு, கறி மங்கு எனப் பயன்படுத்தப்படுகின்றது.

## 2.3 ஏணிக் கோடு அல்லது கழுத்துக் கோடு, நெற்றி விளக்கு

உழைப்பதற்கென்றே பிறப்பெடுத்தவராய்க் காடு மேடெல்லாம் சென்று மரம் வெட்டி காண்டா கம்பு கொண்டு இரு முனைகளிலும் வாளிகளில் பால் நிரப்பி தோள்களில் சுமந்து நெடுந்தொலைவு எம் அன்னைமார்கள் நடந்து சென்று பெரிய தோம்புகளில் ஊற்றுவர். அந்தக் காண்டாகம்புகளின் இரு முனைகளிலும் கொக்கிக் கம்பிகள் இருக்கும். நெற்றி விளக்கை நெற்றியில் கட்டிக்கொண்டு, தீட்டுக் கல்லில்





தீட்டப்பெற்ற சுணை மிகுந்த மரஞ்சீவும் கத்திகளையும் உளிகளையும் எடுத்துக் கொண்டு பேர் கொடுத்து விட்டு வேலைக்குச் செல்வர். அவர்கள் மரம் சீவும் பொழுது சில மரங்களில் கீழ்க்கோடு இருக்கும் சில மரங்களில் கழுத்துக் கோடு இருக்கும். கழுத்தளவு நிமிர்ந்து சீவுவது கழுத்துக்கோடு எனப்பட்டது. கழுத்துக்கும் மேலே இருக்கும் வெட்டுகளுக்கு ஏணி தேவைப்பட்டது. எனவே ஏணி வைத்து ஏறி மரஞ்சீவினர். இதற்குப் பெயர் ஏணிக் கோடு. காண்டா கம்பு என்பது இரண்டு முனைகளிலும் பால் வாளிகளைக் கொக்கியில் மாட்டிக் கொள்ளும் வகையில் தோட்ட மக்கள் தோளில் தூக்கிச் செல்லும் ஒரு வகை உறுதிமிக்கத் தடியாகும்.

நெற்றி விளக்கு என்பது பொழுது விடியாமுன்னமே வேலைக்குச் செல்வதால் வெளிச்சத்திற்காக நெற்றியில் கட்டிக் கொள்ளும் ஒருவகை விளக்காகும். அதனால் மக்கள் அதனை நெற்றி விளக்கென்றே அழைத்தனர்.

மர உளி அல்லது சீவுகத்தி என்பது பால் மரத்தைச் சீவுவதற்காகப் பயன்படுத்தப்படும் கத்தியாகும். இதன் முனைப் பகுதி சற்று வளைந்து மிகவும் சுணைப்பாக இருக்கும். இதனைச் சுணைப்பாக வைத்துக் கொள்ள அடிக்கடி தீட்டிக் கொள்வர். அவ்வாறு தீட்டுவதற்குப் பயன்படுத்தப்படும் கல்லேதீட்டுக் கல்லாகும்.

## 2.4 நிரை

நான் மூன்றாவது நிரையில் மரம்வெட்டிக்கொண்டிருக்கும்போது திடீரென்று கங்காணி வந்துவிட்டார் என மக்கள் பேச்சு வழக்கில் கூறுவதுண்டு.

நிரை நம் தோட்டப்புறத் தமிழிரிடையே அதிகம் புழங்கிய சொல்.

நீர்>நிர்>நிரை

நீர்>நேர்

நிரை நேராக வீற்றிருக்கும் வரிசை. வரி அடுக்குப் பத்தியும் நிரை எனப்பட்டதாகப் பாவாணரின் உயர்தரக் கட்டுரை இலக்கணத்தில் பார்க்கிறோம் .

தோட்டத்தில் நொய்வமரங்கள் நேர்வரிசையில் நடப்பட்டிருக்கும். ஒரு நிரையில் மரம் சீவும் ஒருவர் ஏனைய நிரையில் மரம் சீவும் ஒருவருடன் ஒலி எழுப்பித் தொடர்பு கொள்ளும் வழக்கம் இருந்தது. பக்கத்து நிரையில் உள்ளார் பேசிக்கொள்வதும் வழக்கம் .

நீர் நேர் நிரை நிரல் முதலான சொற்கள் எளிய மக்களிடத்தும் வழக்கில்உள்ளவையே.

நீர் இளகியது. இளகிய நீர் நகரும். ஒரு கோட்டில் முறையாய் நகர்வதால் முறையும் ஒழுங்கும் நீர் என்றும் நேர் என்றும் அழைக்கப்பட்டன.

நீர்மை நேர்மை முதலான சொற்கள் ஒழுங்கையும் முறையையும் உணர்த்தின.

சீர்மை சிறப்பொடு நீங்கும் பயன்இல
நீர்மை உடையார் சொலின்
என நீர்மை குறித்துக் கூறுவார் வள்ளுவர்.

பயனிலவற்றை நீர்மையுடையார் சொல்லுதல் பண்பன்று என்கிறது வள்ளுவம். சீர்மை சிறப்பும் சேர்த்து விலகிவிடுமாம்.

வரிசை வரிசையாக ஒழுங்குடன் அமைக்கப்பெற்ற சொற்றொடர் தொகுப்பு போல் நேர் நேராக ஒழுங்குடன் நடப்பெற்ற மர வரிசையே நிரை எனப்பட்டு தோட்டப்புற

மக்களால் பேணப்பட்ட சொல்லாயிற்று. இச்சொல் தோட்டப்புறத் தமிழரிடை இயல்பான சொல்லாகவே வழக்கில் இருந்தது.

## 2.5 வேலைக்காடு:

வேலைக்குச் செல்லும் இடத்தை வேலைக்காடு என்றனர்; வேலைக்காடு காடாக இருந்ததனாலா? காடு அடர்ந்த பகுதி அவர்கள் வேலை செய்த இடம் என்பதால் வேலை செய்யும் இடத்தை வேலைக்காடு என்றனர். பயிர் செய்யப்பட்ட நிலம் சார்ந்த பணியிடங்கள் காடு எனும் ஒட்டுச் சேர்த்தே மக்களால் வழங்கப்பெற்றன. காடு அடர்த்திப் பொருளும் மிகுதிப் பொருளும் கருமைப் பொருளும் ஓர் ஒட்டாகப் பயன்படுத்தப்படுவதாகும். வயற்காடு, தோட்டக்காடு, பட்டிக்காடு, இடுகாடு, சுடுகாடு முதலான சொற்களை எடுத்துக்காட்டாகச் சொல்லலாம்.

இவ்வாறு ஆய்வு செய்கின்ற பொழுது நம் தோட்டப்புற மக்கள் வகுத்து தொகுத்துக் கொடுத்த தூய தமிழ் கலைச் சொற்கள் பன்னூற்றுக்கணக்கானவை.

அவற்றுள்மேலும் சில :

சாமக்காரன் = விடியலுக்கு முன்னதாகவே மக்களைப் பணிக்கு எழுப்பி விடும் பணியாளர்.

ஓடும்பிள்ளை = தோட்டத்துச் செயற்பாடுகளை மக்களுக்கு வீடுவீடாகச் சென்று அறிவிக்கும் செயற்பாட்டாளர்.

தண்டல் = தோட்டத்தில் பணியாளர்களைக் கண்காணிக்கும் தொழிலாளர்

நடுகாட்டான்>அடர்ந்த காட்டுப் பகுதியின் உட்புறம்

ஆலை>பால் மரத்திலிருந்து எடுக்கப்பட்ட நொய்வப் பாலை ஊறவைத்துக் கட்டியாக்கி அரைத்துப் பதப்படுத்தும் தொழிற்சாலை

புகைக்கூண்டு>அரைத்துப் பதப்படுத்தப்பட்ட பால் தொய்வத்தை (rubber) உலர வைக்கும் பெரிய கூடம். இதில் தீ மூட்டப்பட்டிருக்குமாதலால் எந்நேரமும் புகைந்து கொண்டே இருக்கும். இதனால் இதனைப் புகைக்கூண்டு என்றனர்.

ஒட்டுக்கன்று>பால் மரத்தினின்று திரிவாக்கம் செய்யப்பெற்ற பால்மரக் கன்று

தவரணை>மரக்கன்றுகளை தொகுத்து வைத்திருக்கும் இடம்

செம்பனை>செந்நிறமான அடர்த்தியான காய்க்குலைகளைக் கொண்டிருக்கும் பனை வகையைச் சேர்ந்த ஒருவகை மரம். இச்சொல் மலேசியத் தமிழரால் உருவாக்கப்பட்டதாகும்.

எண்ணெய்ப்பனை>செம்பனைக் காயிலிருந்து எண்ணெய் எடுக்கப்படுவதால் இதனை எண்ணெய்ப்பனை என்றும் மலேசியத் தமிழர் அழைத்தனர்.

அந்தி வேலை>மாலை வேளையில் தோட்டத்து மக்களுக்கு வழங்கப்படும் கூடுதல் வேலை.

பசியாறல்>மலேசியத் தமிழர் காலையில் உண்வுண்பதைப் பசியாறல் என்பர். இச்சொல் இன்றளவும் பயன்பாட்டில் உள்ளது.

தொடுப்பு>கள்ளத்தொடர்பு தொடுப்பு எனச் சொல்லப்பெற்றது.

ஓம்பல்>ஏற்றுக்கொள்ள முடியாத மனக்காழ்பை ஓம்பல் என அழைத்துள்ளனர்.

திரட்டி>பெண்பிள்ளைகள் பூப்பெய்துவிட்டால் அவர்களுக்காகச் செய்யப்படும் சடங்கினைத் திரட்டி என்று அழைப்பர்.

தொங்கல் வீடு>தோட்டப்புறத்தில் மக்களுக்காக அமைக்கப்பட்டிருக்கும் வீடுகள் வரிசை வரிசையாகவே இருக்கும். இவ்வீட்டுவரிசையின் கடைசி வீடு தொங்கல் வீடு என்று அழைக்கப்பட்டது.

நாட்டாண்மைக்காரர்>தமிழ் நாட்டில் உள்ளது போலவே தோட்டப்புறத்து மக்களின் பல்வகை சிக்கல்கள் பஞ்சாயம் என்று சொல்லப்பெறும் தீர்வுக்குழுவால் உசாவல் செய்யப்பட்டு தீர்த்து வைக்கப்பட்டன. இக்குழுவில் இடம்பெற்றிருக்கும் முதன்மைப் பொறுப்பாளரே இவ்வாறு அழைக்கப்பெற்றார். இக்குழு முறை இக்கால் நடைமுறையில் இல்லை.

குச்சு = குடியிருப்புப் பகுதி – யாவாக்குச்சு. கடாரத்தில் இடப்ளின் எனும் தோட்டத்தில் நீண்டகாலமாக இருந்த குடியிருப்பு வீட்டு வரிசை. யாவாக்காரர்கள் அங்குக் குடியிருந்தமையால் அதனை யாவாக் குடியிருப்பு என்றனர். ஜாவா எனுஞ் சொல்லை யாவா என்றே தமிழ் மரபுப்படி தோட்ட மக்கள் அழைத்துள்ளனர்.

பச்சைக்காடு = அடர்ந்த காடு பொட்டல் = காட்டில் நடுவே தென்படும் வெளிப்பகுதி.

பொட்டு = பால்மாரவெட்டுகளின் அளவைக் குறிக்கவைகப்படும் குறியீடு. சிறிய புள்ளி வைத்து அளவிட்டமையால் இதனைப் பொட்டு வைத்தல் என மக்கள் அழைத்தனர்.

மயிர் முளைத்தான் = இரம்புத்தான் (மயிர் முளைச்சான்)பழம் இவ்வாறு அழைக்கப்பட்டது. இப்பழத்தின் மேல் தோலில் மயிர்க்கால்கள் அடர்த்தியாக இருக்கும். இதனை இக்கால் மயிரம் பழம் எனச் சுருக்கப்படுத்தியுள்ளனர்.

கம்பிச்சடக்கு = தண்டவாளம். தொடர்வண்டிப் பாதை இவ்வாறு அழைக்கப்பட்டது.

வழிமறித்தான் = இரவு நேரங்களில் வழிகளில் நிற்கும் பறவை (வழிமறிச்சான்) என அழைக்கப்பட்டது.

கால்கட்டை = கட்டையால் செய்யப் பெற்று கால்களில் அணியும் காலணி.

ஆட்டுக்கல் = இட்டலி, தோசை செய்வதற்காக அரிசியை குழைய ஆட்டிஅறைக்கும் கல் .

எந்திரக்கல் = வறுத்த அரிசியை மாவாக அறைக்கும் கல்.

மத்து = கீரைகளை கடைவதற்குப் பயன்படுத்தப்படுவது

சேற்றுக் கப்பல் = மலேசியா பேராக்கில் கூலா

தோட்டம் என்றொரு தோட்டம் இருக்கிறது. இங்குச் செம்பனைத் தோட்ட வாய்க்கால்களில் சேற்றைவாறும் எந்திரத்திற்கு சேற்றுக் கப்பல் என்று தோட்டப்புற மக்கள் பெயரிட்டு அழைக்கின்றனர்;

ஆயாக் கொட்டகை/ ஆயாக் கொட்டாய் = தோட்டப்புறத்தில் வேலைக்குச் செல்லும் தொழிலாளர்களின் குழந்தைகளைப் பெற்றோர் வேலை முடித்துத் திரும்பும் வரை பாதுகாக்கும் இல்லம். எல்லாத் தோட்டங்களிலும் ஆயாக் கொட்டகை கட்டாயம் இருக்கும். இங்குக் குழந்தைகளைப் பேணும்தொழிலுக்குரிய பெண்கள் ஆயா என என அழைக்கப்பட்டனர்.

கள்ளுக்கடை=வேலைக்குச் சென்று களைப்போடு இல்லம் திரும்பிய ஆண் தொழிலாளர் அருந்துவதற்காக அமைக்கப்பட்டுள்ள தென்னங்கள் விற்கும் மதுக்கடை.

அந்திவேலை = மாலை நேரத்தில் செய்யும் பகுதி வேலை.

நாடகக் கொட்டகை / கூத்துக் கொட்டகை = தீமிதி திருவிழாக் காலங்களில் நடத்தப்படும் கேளிக்கை நிகழ்ச்சிகளுக்காகக் கட்டப்பட்டுள்ள கூத்து மேடை.

மரமேறி = தோட்டத்தில் உள்ள தென்னை மரங்களில் ஏறி கள் இறக்கும் தொழிலாளர்.

குத்துக்கட்டை = தோட்டப்புறக் காடுகளில் உள்ள காய்ந்து முரடு தட்டிக் கிடக்கும் மரங்களின் அடிப்பகுதி.

போங்கு =மண்ணுக்குள்ளோ குத்துக்கட்டைகளிலோ தென்படும் பெரிய பொந்து.

உணாத்தல் = பெண்கள் குளித்த பின் தங்களின் நீளமானக் கூந்தலைத் துண்டுத்துணியைச் சுருட்டிக்கொண்டு தட்டி காய வைத்தல்.

தங்கலான் வண்டி எனும் சொல் கடாரப் பகுதியில் வழக்கிலிருந்தது. இது தமிழின் வேர் மூலத்திலிருந்து பிறந்தது என்பது ஆராய்கையில் புலப்பட்டது.

கல்>gali>gala>tenggala= கலப்பை

நாங்கூழ்==>நிலத்தைத் துளைத்து உழும் கலப்பை/ வயிற்றில் துளைத்துக் கொண்டிருக்கும் நாக்குப்பூச்சி

நாங்கூலம்>நாங்குலம்= கலப்பை

நாங்கூலம்>நாங்கூரம்>நங்கூரம்= கலப்பைப் போல் கடலுக்கடியில் நிலத்தில் குத்தி கப்பலை நிறுத்தும் கருவி.

இச்சொல், ஆங்கிலத்தில் anchor எனத்திரிந்தது.

E.anchor. OE.ancoraGK.ankuraOHG.anchar. LG.MHG. anker, On.akkeri, Sw.ankare, Da.anker, OF.ancre, It.ancora, L. anchora

அங்கு= எனும் வளைவு பொருளிலும் இச்சொல் அமையும்.

கல்லுதல் தோண்டுதல், குத்துதல் பொருளில் கூலம், கூரம் அமைவதை ஒப்பிடுக.

Teng gala எனும் சொல் தமிழிலிருந்து மலாய் மொழியில் சில மாற்றங்களுடன் திரிபுற்றுச் சென்றடைந்த சொல்லாகும்.

Keretatenggala>தங்கலான் வண்டி.

= உழவுந்து, நாங்குல வண்டி( கலப்பை வண்டி)

இன்று இச்சொற்களை எல்லாம் நாம் இழந்து வருகின்றோம். காலம் மாறுகின்றது; மக்கள் வாழ்க்கை முறை மாறுகின்றது; அவர்களின் சூழலும் மாறுகின்றது. இக்காலத்துக் குழந்தைகளுக்கு இவை பழம்பொருள்களாகிவிட்டன.

பழக்கவழக்கமே மொழி வளர்ச்சிக்கு முதன்மை காரணம் என்பாரும் அறிவின், மனத்தின்முதிர்ச்சியே மொழி வளர்ச்சி என்பாரும் முரண்பட்டு வழக்காடியதுமுண்டு. சுக்கின்னர் (Burrhus Frederic Skinner) என்பாரும் நோம்சோம்சுகியும் (Avram Noam Chomsky) இவ்வகையில் முரண்பட்டு நின்றனர். இவ்வகையில் சுகின்னரின் கருத்தும் சோம்சுகியின் கருத்தும் தமிழரைப் பொறுத்தவரை பொருந்தக் கூடியதாகும். பழக்கப்படாததாலும் மனமுதிர்ச்சி இல்லாமையாலும் பிறவற்றுக்கு ஆட்படுகின்றமையாலும் நற்றமிழ்ச் சொற்களின் ஆளுமை மலேசியத் தமிழரிடமிருந்து படிப்படியாக மறையுண்டு வருகின்றது எனலாம்.

இருபது முப்பது ஆண்டுக்கு முன் இருந்த தோட்டப்புறச் சூழ்நிலைகள் மாறி புதிய சூழ்நிலைகளில் பணியாற்றுகின்றவராய் இன்றைய பெரும்பான்மை தமிழர்கள் வாழ்கின்றனர். ஒரு காலத்தில் புதிய சூழ்நிலைகளில் வாழ்ந்தாலும் அச்சூழ்நிலைக்குரிய தமிழ்ச்சொற்களைத் தமிழ் மக்கள் உருவாக்கினர்.

வீடுகளில் பயன்படுத்தாமையால் இக்கால் முந்தைய பொருள்கள் பல அறியப்படாத பொருள்களாகியும் விட்டன. இதன் நிமித்தமாக அவற்றின் பெயர்களாகவிருந்த பல சொற்களும் மறையுண்டு வருகின்றன. மலேசியாவில் தோட்டப்புற மக்கள் பாதுகாத்து வந்த அருந்தமிழ்ச் சொற்கள் பன்னூற்றுக்கணக்கானவை. அவற்றைத் தொகுத்துத் தனி அகரமுதலியையே உருவாக்கலாம். கால மாறுதல்களுக்கேற்ப இக்கால் மலேசியத் தமிழரின் புதிய தலைமுறையினர் உலகப் பயன்பாட்டிற்காகப் பல்வகை புதிய கலைச்சொற்களையும் உருவாக்கிவருவது பெருமையூட்டுவதாகும்.







# TAMIL EPIGRAPHICAL STUDIES IN SRI LANKA

SELLADURAI GUNASINGAM Lecturer, University of Peradeniya, Sri Lanka

The progress of Tamil epigraphical studies in Sri Lanka may be said to have gone through several stages on the basis of the varied nature of the efforts made with regard to epigraphical studies in general in the island and of the different rates at which they were undertaken and carried out.

The scientific study of epigraphy in Sri Lanka was initiated in 1875 under the patronage of the then government and has been continued up to date with varying degrees of interest and enthusiasm. Research in Tamil epigraphy, however, was started much later, in the first quarter of the twentieth century. The question as to why studies in Tamil epigraphy were not started during the period when Sinhalese epigraphical studies were initiated in 1875, may be answered in two ways:

(1) As compared to the numerical strength of the Sinhalese inscriptions discovered in Sri Lanka, the number of Tamil inscriptions found there was deplorably small.

(2) The second and the most important reason is the deplorable lack of competent and capable scholars among Tamils to associate themselves with the study of Tamil epigraphy, as evidenced by the following statement made by H. C. P. Bell, who was then functioning as the Commissioner of Archaeology in Sri Lanka.

"Owing to the regrettable want of Tamil scholars in Sri Lanka capable of dealing with these old epigraphical records, the Archaeological Commissioner has had to depend on the generosity of successive learned epigraphists attached to the Archaeological Survey of India – Dr. E. Hultzsch (retired), the late M.R. Ry. Rai Bahadur, V. Venkayya Avargal (a successor) and, latterly, the present Superintendent for Epigraphy, South India, M. R. Ry. H. Krishnasastry Avargal. Without their kindly aid these old inscriptions must have remained virtually a closed book."[1]

During the first stage, when the situation described under 2 above prevailed, there seems to have been no notable attempt taken towards the progress of the study of Tamil epigraphy in Sri Lanka. The first step taken, during this stage with respect to Tamil inscriptions was by a Portuguese viceroy. During the period of Portuguese rule in Sri Lanka, the Portuguese viceroy, Constantine de Saa, who engaged himself in the vandalistic activity of demolishing the Koneswaram temple at Trincomalee and erecting a fortress on its ruins, found mong the ruins some Tamil inscriptions whose contents he was interested in finding out about. He, therefore, had those inscriptions deciphered by some ceylonese and sent a report of the content to the Portuguese king[2]. Although this is the earliest step taken in relation to the study of the contents of Tamil inscriptions in Sri Lanka it remains insignificant from the point of view of the development of Tamil epigraphical research owing to the fact that the viceroy's main intention in getting the inscriptions deciphered was simply to have an access to their contents and not to promote Tamil epigraphical studies, something which is evidenced by the absence of subsequent activities by him with regard to the Tamil inscriptions.

The notable names associated with the progress of Tamil epigraphical studies in Sri Lanka during this stage are those of Bland[3], Sir Alexander Johnston,[4] Hugh Nevil,[5] Muller[6], Bell[7] and Krishnasastri[8]. The contributions of Bland, who was then attached to an English H. M. ship Wolf and Sir Alexander Johnston, who was then the chief justice under the Governor, Sir Thomas Maitland, though limited, lie in the fact that they preserved the records which they came across in the form of facsimiles with a view to obliging those interested in epigraphy by publishing these records in later times. The study of antiquities assumes special significance at the present time because it is relevant to the question whether there are any areas in Sri Lanka which have traditionally been associated with particular communities or religious groups. We see that this fact is fully appreciated by various persons, some of whom are not above wilfully distorting the facts in order to sustain their assumptions. We also see that the Department of Archaeology with a sudden burst of enthusiasm has demarcated declared areas for archaeological research. It is therefore fortunate that Bland should have bestowed the utmost care in giving the facsimile of the inscriptions as exactly as possible and in preserving the antiquities for further research and in giving an elaborate description of the antiquities. We are beholden to Bland for performing this vital service in furthering the interests of scholarship in the field of epigraphy and historical knowledge. Distortion will become less easy as a result of Bland's endeavours. The same comment might be made of some of the contributions by Sir Alexander Johnston.

However, among the above named, special mention should be made of H.C.P. Bell who initiated regular archaeological work in Sri Lanka in 1890, and discovered, deciphered, translated and published a large number of inscriptions.

Bell rendered great services to Tamil epigraphical studies in Sri Lanka during the period when he was the

Commissioner of Archaeology, by maintaining records in the annual reports of the Archaeological Survey of Sri Lanka, of the Tamil inscriptions which were discovered from time to time, communicating the

discoveries of these inscriptions to the then superintendent of epigraphy and one of the most eminent epigraphists in South India at that time M.R.Ry.H. Krishnasastri, and, when the readings and comments of Krishnasastri were received, recording them in the annual reports. To put it briefly, if it were not for the services of Bell in this direction, Krishnasastri would not have had access to these Tamil inscriptions and they, therefore, would have remained unknown.9

H. W. Codringto10n and Rasanayagam11 also to some extent made their contributions to the study of Tamil inscriptions by deciphering, translating and publishing some inscriptions. We can today discover glaring errors in many of the texts of the inscriptions published by them as well as in their interpretations of them; this should by no means, however, detract from the credit due to these pioneers for their contributions to our knowledge of Tamil epigraphy. It is also to be noted that some of the references found in Rasanayagam's Ancient Jaffna to some unknown Tamil inscriptions facilitated the eventual discovery of some of these inscriptions. The following may be cited as an example:

"Karunakaran while being engaged in collecting salt lived at Inuvil and built there a temple for the worship of Pillaiyar which is still called Karunakara Pillaiyar temple. It now lies within the village of Urumpirai. There is a stone inscription in the temple of the year 1567 A.D. in which the temple is mentioned as Karunakara Pillaiyar temple".

The above lines in pages 266-67 of his above work facilitated our later discovery of an inscription in the same Karunakara Pillaiyar temple at Urumpirai.12

The feature that characterizes these efforts made in Tamil epigraphical studies during this first stage is that, while some of the Tamil inscriptions then available were deciphered, translated and published, no attempt was made to study them on a scientific basis.

Those who, later on, associated themselves with research in Tamil epigraphy endeavoured to understand the contents of the inscriptions in a scientific light. The remarkable development that featured new stage in research in Tamil epigraphy is that some scholars for the first time embarked on the task of scientifically interpreting the texts of the inscriptions against their historical background. The first of the epigraphists who thus opened a new epoch is Senerath Paranavitana.13 Though Paranavitana, who remains unsurpassed as the doyen of epigraphists in Sri Lanka, edited only a few Tamil inscriptions as compared to the large amount of Brahmi and Sinhalese inscriptions he edited and published, he, for the first time brought out on a scientific basis standard scholarly editions of Tamil inscriptions together with an account of their historical background. Paranavitana's endeavours in this direction, therefore, mark the end of one stage and the beginning of another in the sphere of research in Tamil epigraphy in SriLanka. It deserves to be mentioned here that Paranavitana started his work on epigraphy with a Tamil inscription.

Another important feature of this second stage is that the need remarked in Bell's statement mentioned earlier for a Tamil scholar capable of dealing with Tamil inscriptions in Sri Lanka itself was to some extent fulfilled. This was the period when K. Kanapathipillai was concentrating on the study of the language of some South Indian inscriptions.

Kanapathipillai edited only three Tamil inscriptions discovered in Sri Lanka in his life time.14 As he was serving in the University in the capacity of the Professor and Head of the Department of Tamil, he formed a popular impression that he had much to do with the Tamil epigraphy in Sri Lanka, as evidenced by numerous written communications by some of the local people to Kanapathipillai of the discoveries of some Tamil inscriptions. The following is an example of such communications:15

Village Council – Sampaltivu 25-06-1962
Professor K. Kanapathipillai,
Peradeniya

Inscription discovered in the field of
Aiyankuda, Sampaltivu

Dear sir,

There was a news item in the Tinakaran daily that the inscription discovered near the tank of Aiyankuda in the division of Mankanai at Sampaltivu, belongs to the reign of Parakramabahu the Great who ruled in the tenth century. We informed the Commissioner of Archaeology of the discovery of this inscription with a view to knowing its contents. In response to our request, the Commissioner has advised us to contact you. I am, therefore, humbly requesting you to kindly let us know the contents of the inscription in detail. I shall convey to you whatever information I gather from here.

Thanks.

on behalf of the people of Sampaltivu, soliciting your reply,
sigd. V. N. THAMBIRAJAH

Again in the late 1950s Kanapathipillai was

